# உள்ளே

கொரோனா வைரஸ் தொற்று என்ற பெயரில் நடக்கும் உலகளாவிய ஏமாற்று வேலைகளை அம்பலப்படுத்தும் சிறப்பிதழ்.

தாயகம் இதழ்-20

வெளியீடு : தமிழர் கழகம்

# வைரஸ் நோய்த் தொற்று எனும் ஒத்திகை: பில்கேட்ஸ் நிறுவனத்தின் கொரோனா நாடகம்!

***கொரோனா வைரஸ் தொற்று மற்றும் பேரழிவு குறித்து ஆறு மாதங்களுக்கு முன்பே ஒத்திகை நிகழ்வு நடத்திய ஜான்ஸ் ஹாப்கின்ஸ் சுகாதார பாதுகாப்பு மையம் மற்றும் பில் அண்ட் மெலிண்டா கேட்ஸ் அமைப்பு - ஒரு விமர்சன பகுப்பாய்வு கட்டுரை***

உலகையே அச்சுறுத்தி கொண்டிருக்கும் கொரோனா வைரஸ், என்னென்ன பாதிப்புகளை ஏற்படுத்த போகிறதோ என்று பதற்றத்துடன் அனைவரும் இயங்கி கொண்டிருக்கும் இவ்வேளையில், இப்படி ஒரு தொற்று கிருமி பாதிப்பும் பேரழிவும் நடந்து விட்டதை போன்ற ஒரு ஒத்திகை நிகழ்வு ஆறு மாதங்களுக்கு முன்னரே (2019 ஆம் வருடம், அக்டோபர் மாதம்) நடந்தேறியுள்ளது என்பது ஆச்சர்யத்தையும் அதிர்ச்சியையும்

தருகிறதல்லவா.

சீனாவில், வுஹான் மாவட்டத்தில், இப்படி ஒரு அபாயகரமான வைரஸ் தொற்று பரவி வருகிறது என்று ஜனவரி மாதம்தான் உலக மக்களுக்கு தெரியும். சீனாவுக்கே அப்போதுதான் தெரியும். ஆனால், அதற்கு சுமார் மூன்று மாதங்களுக்கு முன்பாக ஜான்ஸ் ஹாப்கின்ஸ் நோய்த்தொற்று மையம் மற்றும் பில் அண்ட் மெலிண்டா கேட்ஸ் அமைப்பு இணைந்து தத்ரூபமாக ஒரு ஒத்திகை நிகழ்வை *(simulation)* நடத்தி இருக்கிறார்கள். இதில் பல்வேறு துறை சார்ந்த நிபுணர்கள், பல்வேறு நாடுகளின் பிரதிநிதிகள், தொழில் நிறுவன முதலாளிகள், சர்வதேச அமைப்புகளைச் சேர்ந்தோர் கலந்து கொண்டு உண்மையான அவசர கால கலந்துரையாடல் கூட்டம் போலவே நிகழ்த்தி உள்ளார்கள்.

இந்த நோய் தென் அமெரிக்காவில் பன்றிகளிடையே காணப்பட்டு,

பண்ணை விவசாயிகள் மூலமாக பரவுவதாக ஒரு புனைவு கதையையும் பின்னியிருக்கிறார்கள். ஒத்திகையின் முடிவாக, இந்த பேரழிவின் தாக்கங்கள் குறித்த சில கணக்கீடுகளைப் பதிவு செய்துள்ளார்கள்.

'எத்தனை மக்கள் இறக்க நேரிடும்' என்ற ஒரு புனைவுக் கணக்கையும் தெரிவித்து உள்ளார்கள். பொருளாதாரம் எந்த அளவு சரியும், மொத்த உள்நாட்டு உற்பத்தி சரிவு (ஜிடிபி), சர்வதேசச் சுற்றுலா மற்றும் போக்குவரத்து மாற்றங்கள், தடைகள், இணைய சேவை, ஊடகங்கள் பங்கு, தொழில் நிறுவன அதிபர்களின் பங்களிப்பு, அரசாங்க மற்றும் உலக தலைவர்களின் பங்களிப்பு, கிருமி நாசினி தயாரிப்பு நிறுவன பங்களிப்புகள், சங்கிலி விநியோக நிறுவனங்கள் உதவிகள் என்று மிகவும் விரிவாகச் செல்கிறது கலந்துரையாடல்.

தற்போது, அந்த ஒத்திகை நிகழ்வு உண்மையாகி விட்டது. இந்த ஒத்திகை

நிகழ்வை நடத்திய நிறுவனத்திடம், சிலர் கேள்வி எழுப்புகிறார்கள்.

'நீங்கள் நடத்திய ஒத்திகையில் கூறப்பட்டுள்ள கணக்குகள் உங்களின் கணிப்பா? 65 மில்லியன் மக்கள் இறப்பதாக கூறப்பட்டுள்ளது, இதை எவ்வாறு எடுத்து கொள்வது? எவ்வாறு அதே கொரோனா வைரஸ் என்ற பெயர் கொண்ட ஒரு புனைவு கதையை உருவாக்கி இருக்கிறீர்கள்?' போன்ற கேள்விகளுக்கு, 2020 ஜனவரி 24 ஆம் தேதி அன்று ஒரு அறிக்கையை அந்நிறுவனம் (ஜான்ஸ் ஹாப்கின்ஸ் சுகாதார பாதுகாப்பு மையம்) வெளியிட்டுள்ளது.

அந்த அறிக்கையில்,
'2019 ஆம் வருடம் அக்டோபர் மாதம், ஜான்ஸ் ஹாப்கின்ஸ் சுகாதார பாதுகாப்பு மையம் மற்றும் பில் அண்ட் மெலிண்டா கேட்ஸ் அமைப்புடன் கைகோர்த்து, தொற்று கிருமி

பேரழிவு குறித்த ஒரு மேசை பயிற்சியை ஈவென்ட் 201 என்ற பெயரில் நிகழ்த்தினோம். இப்போது சீனாவில் வெளிப்பட்ட கொரோனா தொற்று கிருமி குறித்துதான் முன்னரே கணித்தீர்களா? இதில் கூறப்பட்டுள்ள 65 மில்லியன் மக்கள் இறப்பு என்பது கணிக்கப்பட்ட உண்மையா? என்பது போன்ற கேள்விகளை எங்கள் நிறுவனத்தை பலர் தொடர்பு கொண்டு கேட்கிறார்கள்.

நாங்கள் மிகவும் தெளிவாக கூறி இருக்கிறோம், இது வெறும் புனைவு மட்டுமே, இதில் கூறப்பட்டுள்ள எண்ணிக்கைகள் அனைத்தும் புனைவுகள். மேசை ஒத்திகை பயிற்சியாக இதனை செய்தோம். நிகழ்வு தத்ரூபமாக இருக்க வேண்டும் என்ற நோக்கில் பிரேசிலில் பன்றிகள் இடம் இருந்து மனிதருக்குப் பரவியதாகவும் இந்தப் பேரழிவில் 65 மில்லியன் மக்கள் இறப்பார்கள் எனவும் கற்பனையாகப் புனைந்தோம். அது

எங்கள் கணிப்பு அல்ல என்பதை தெளிவு படுத்துகிறோம்.

நாங்கள் கூறியுள்ள நாவல் கொரோனா வைரஸ் தொற்றுக்கும் தற்போதுள்ள nCoV - 2019 என்ற வைரஸுக்கும் எந்த ஒற்றுமையும் இல்லை.

இப்படி ஒரு நோய்த்தொற்று பரவினால் என்ன மாதிரியான தடுப்பு நடவடிக்கைகள் தேவைப்படலாம் என்பதற்கான மாதிரி நிகழ்வுதான் இது. இது போன்ற பல ஒத்திகை நிகழ்வுகளை வெவ்வேறு காரணங்களுக்காக முன்பு நிகழ்த்தியுள்ளோம்'

என அந்நிறுவனம் அறிக்கை கொடுத்துள்ளது. அறிக்கையெல்லாம் சரிதான், ஆனால் 'அந்த அறிக்கையில் உள்ள பதில்கள் நம்மை திருப்திப்படுத்துகின்றனவா' என்று யோசித்தால், 'இல்லை' என்ற பதிலே தொக்கி நிற்கிறது.

EVENT201

A GLOBAL PANDEMIC EXERCISE

அந்த ஒத்திகை நிகழ்வின் சில துளிகள் இங்கு அப்படியே மொழி பெயர்க்கப்பட்டு தரப்பட்டுள்ளன. இந்த ஒத்திகை நடந்தது அக்டோபர் 2019 என்பதை நினைவில் கொள்ளவும்.

ஜான்ஸ் ஹாப்கின்ஸ் சுகாதார பாதுகாப்பு மையம் மற்றும் பில் அண்ட் மெலிந்த கேட்ஸ் அறக்கட்டளை இணைந்து, 2019 ஆம் வருடம் அக்டோபர் மாதம் ஒரு தத்ரூபமான ஒத்திகையை அரங்கேற்றியது. அதன் பெயர் ஈவென்ட் 201, தொற்று நோய்க் கிருமி குறித்த பயிற்சி ஒத்திகை.

முதன் முதலில், தென் அமெரிக்காவில் சில மாதங்கள் அல்லது சில வருடங்களுக்கு முன்பு என்றே  கூறலாம், ஒரு  புது வகை கொரோனா வைரஸ் நல்ல ஆரோக்கியமான பன்றிகளில் அறியப்படுகிறது.

மெதுவாக பன்றி மந்தைகளில் பரவி அதன் காரணமாக முதலில் பண்ணை விவசாயிகள் நோய் தொற்றுக்கு ஆளாகிறார்கள்.

பாதிக்கப்பட்ட மனிதர்களுக்கு சளித்தொல்லை துவங்கி நுரையீரல் தொடர்பான தொந்தரவுகள், காய்ச்சல் நிமோனியா போன்ற அறிகுறிகள் தென்படுகின்றன.

சிலர் அவசர சிகிச்சை பிரிவுகளில் சேர்க்கப்படுகின்றனர் பலர் இறக்கின்றனர். அறிஞர்கள் பார்வையில், இது உடனடியாக கவனத்தில் எடுத்துக் கொள்ளப்படவில்லையெனில் இந்த

நோய்த்தொற்று உலக நாடுகள் எங்கும் பரவி மக்களை பாதிக்கும்.

இந்த நோய்த்தொற்றை கட்டுப்படுத்தும் நோக்கில் நோய்த்தொற்று மற்றும் அவசர கால குழு அமைக்கப்பட்டு பரிந்துரைகள் கேட்கப்படுகின்றன.

இந்த நோய்த் தொற்று நிகழ்வு 201 இன் முடிவாக  அறிவிக்கப்பட்டது,

"இது ஒரு  பேரழிவு. கடந்த 18 மாதங்களில் 65 மில்லியன் மக்கள் உயிரிழந்து விட்டனர். ஆரம்ப கட்டத்தில், கட்டுப்படுத்த கூடிய வகையில் அறியப்பட்டாலும், கூட்ட நெரிசல் மிக்க நகர மற்றும் பெருநகரங்களில்  இது வெகு வேகமாக பரவி  விட்டது. ஒவ்வொரு ஆறு மாத காலத்திலும், ஒரு புதிய நாட்டுக்கு வீரியமாக பரவுகிறது.

உலக பொருளாதாரம் அதள பாதாளத்திற்கு போய்க்கொண்டிருக்கிறது. ஜிடிபி 11 சதவீதம்

குறைந்து விட்டது. உலக பங்கு சந்தை 20 முதல் 40 சதவீத சரிவு நிலையை எட்டி இருக்கிறது. பொருளாதார நிபுணர்களின் பார்வையில் இந்த நோய்த்தொற்றின் பாதிப்பால் ஏற்பட்ட பொருளாதார சீரழிவு சரிக்கட்ட பல ஆண்டுகள் ஆகும், பத்தாண்டுகள் கூட ஆகலாம்.

மறைவான பாதிப்புகளாக அரசாங்கத்தின் மீது அதிருப்தி, தகவல்கள் மீது நம்பிக்கையின்மை, சமூக கட்டமைப்பு சீர்குலைவு ஆகியன சரியாக இன்னும் பல ஆண்டுகள் தேவைப்படலாம். இந்த உலக மக்கள் கூட்டம், அடுத்த இத்தகைய தொற்று பேரழிவிற்கு சேர்ந்து போராட தயாராகி விட்டோமா? என்ற கேள்வியுடன் இந்த ஒத்திகை நிகழ்வு முடிகிறது.

பில்கேட்ஸ், தடுப்பூசிகளுக்கு ஆதரவாகச் செயல்படும் நபர். இந்தியா உள்ளிட்ட பல நாடுகளுக்குத் தடுப்பூசிகளுக்கான நிதி



உதவி செய்து செல்வாக்கு பெற்றுள்ளவர். இவரது நிறுவனத்திற்கும் மருந்து நிறுவனங்களுக்கும் உள்ள தொடர்பு உலகறிந்தது.

கொரோனா எனும் வைரஸின் தாக்கம் உலகப் பொருளாதாரத்தை எவ்வாறு சிதைக்கும் என்பதைப் பற்றிய இவரது ‘ஒத்திகை நிகழ்வு’ இன்றைக்கு உண்மையாகிக்கொண்டுள்ளது. இந்நிலையிலும் உலகநாடுகள் இவரைக் கேள்விக்குள்ளாக்கவில்லை.

அந்த ஒத்திகை நிகழ்வின் வீடியோ

பதிவு இந்த இணையதள முகவரியில் காணலாம்.
https://youtu.be/AoLw-Q8X174

அந்நிறுவனத்தின் மறுப்பு அல்லது பொறுப்பு துறப்பு அறிக்கை
http://www.centerforhealthsecurity.org/newsroom/center-news/2020-01-24-Statement-of-Clarification-Event201.html

அந்நிறுவனத்தின் மறுப்பு அல்லது பொறுப்பு துறப்பு அறிக்கை குறித்த இன்னும் விரிவான விளக்கங்களை கீழே உள்ள இணையதள முகவரியில் அறியலாம்.
https://www.factcheck.org/2020/01/new-coronavirus-wasnt-predicted-in-simulation/

*- தமிழ்க்கனி,*
*முனைவர் பட்ட ஆய்வாளர்*
*பொதுமக்கள் ஆளுகைத் துறை*

*நன்றி: செம்மை*

# கொரோனா வைரஸ்... விசாரிக்கப்படுவாரா பில்கேட்ஸ்???

உலகம் முழுக்க கொரோனா பரவ பில் கேட்ஸ் தான் காரணம் என்று அமெரிக்க அதிபர் டிரம்பின் நெருங்கிய நண்பர் ரோஜர் ஸ்டோன் தெரிவித்துள்ளார்.

பில் கேட்சுக்கு எதிரான இந்த குற்றச்சாட்டு குறித்து பார்க்கும் முன், பில் கேட்ஸ் ஆறு வருடங்கள் முன் பேசிய விடயம் ஒன்றை இங்கு நினைவு கூற வேண்டியுள்ளது.

கொரோனா மனிதர்களை தாக்கும் முன்பே, கொரோனா போல ஒரு வைரஸ் உருவாக வாய்ப்புள்ளது என்று அவர் எச்சரிக்கை விடுத்திருந்தார். அவர் கொரோனா என்ற பெயரை மட்டும்தான் குறிப்பிடவில்லை. ஆனால் அந்த வைரஸ் இப்போது எப்படி எல்லாம் செயல்படுகிறதோ அதை அப்படியே

குறிப்பிட்டு இருந்தார்.

இந்த நிலையில்தான் அமெரிக்க அதிபர் டிரம்பின் நெருங்கிய நண்பர் ரோஜர் ஸ்டோன் நேரடியாக பில் கேட்ஸ் மீது குற்றச்சாட்டு வைத்துள்ளார். "இந்த வைரஸ் பரவியதிலும் அது உருவானதிலும் பில் கேட்சுக்கு முக்கிய பங்கு இருக்கிறது என்று நினைக்கிறேன். இதுகுறித்து விவாதம் செய்யவேண்டும். நான் சொல்லும் கருத்தை சிலர் தவறு என்று சொல்வார்கள், சிலர் சரியென்று சொல்வார்கள். ஆனால் நான் சொல்வதை விவாதம் செய்தே ஆக வேண்டும்.

பில் கேட்ஸ் மற்றும் சில பணக்காரர்கள் மருந்துகளை விற்பனை செய்யவும், மக்கள் கையில் மைக்ரோசிப்களை பொருத்தவும், அவர்களை எப்போதும் கண்காணிக்கவும் இந்த திட்டத்தை கையில் எடுத்துள்ளனர் என்று நம்புகிறேன். இதனால்தான்





கொரோனா பரவுகிறது என்று நான் நினைக்கிறேன். என் உயிரே போனாலும் நான் தடுப்பூசிகளை போட மாட்டேன்" என்று ரோஜர் குறிப்பிட்டு இருக்கிறார்.

அவரது குற்றச்சாட்டு அமெரிக்காவில் இன்னும் சிலர் வழி மொழிகிறார்கள். இந்த நிலையில் பில் கேட்ஸ் மனித குலத்தின் மீது உயிரியல் யுத்தம் *(Bio war)* தொடுக்கிறாரா என பல்வேறு தரப்பினரும் கேள்வி எழுப்பியுள்ளனர். வைரஸ் குற்றச்சாட்டுக்கு உள்ளாகியிருக்கும் பில் கேட்ஸ் அமெரிக்க அரசால் விசாரிக்கப்படுவாரா என்றும் அரசியல் விமர்சகர்கள் கேள்வி எழுப்பியுள்ளனர்.

# உலக சுகாதார அமைப்பும் பில் கேட்சும்

உலக சுகாதார அமைப்பு(WHO) என்பது ஏதோ உலக மக்களின் நலனுக்கானது என்று பலர் நினைத்துக் கொண்டிருக்கிறார்கள். ஆனால் அது முழுக்க பில் கேட்ஸின் பணத்தினாலும், பில் கேட்ஸின் திட்டங்களை செயல்படுத்தும் அமைப்பாகத் தான் இருக்கிறது. இதன் முக்கிய கொடையாளர் பில் கேட்ஸ் தான்.

பில் கேட்ஸின் கொடூர திட்டங்களை மக்கள் நலனுக்கான திட்டங்கள் என்ற பெயரில் செயல்படுத்தி வருகிறது உலக சுகாதார அமைப்பு. பல்வேறு உலக நாடுகள் உலக சுகாதார அமைப்பில் இருந்து வெளியேறியுள்ளன. இன்னும் பல நாடுகள் அதன் கொடிய திட்டங்களை செயல்படுத்த



# WHOவை விரட்டி அடித்த நாடுகளில் கொரோனா தொற்றும் இல்லை, உயிரிழப்புகளும் இல்லை, ஊரடங்கும் இல்லை, மருந்து நிறுவனங்களுக்கு வருமானமும் இல்லை.

மறுக்கின்றன. கொரோனா நாடகத்தின் வழியாக அம்பலப்பட்டு நிற்கிறது உலக சுகாதார அமைப்பு.

பல நாடுகள் உலக சுகாதார அமைப்பின் செயல் திட்டங்களுக்கு பணிய மறுத்து கொரோனா நாடகத்தில் இருந்து விலகியுள்ளன. இது பில் கேட்ஸின் சதிகார கும்பல் என்றே சில நாடுகள் அறிவித்துள்ளது.

# பில் கேட்ஸை விசாரிக்க கோரி அழுத்தம் அதிகரிக்கிறது

பில் கேட்ஸ் தனது சுயலாபத்திற்காக கொரோனா (கோவிட்-19) வைரஸை பரப்பியதாகவும், இதன் பின்னணியில் உலகம் தழுவிய மிகப் பெரிய தடுப்பூசி வணிக நோக்கமும் உள்ளதாக குற்றச்சாட்டு எழுந்துள்ளது. அவரை விசாரிக்க கோரி கையெழுத்து இயக்கம் தொடங்கப்பட்டுள்ளது.

வெள்ளை மாளிகையின் அதிகாரப்பூர்வ இணையதளத்தில் ஒரு மனுவை உருவாக்கி 30 நாட்களில் 1 லட்சம் அமெரிக்க குடிமக்களிடம் கையொப்பம் பெற வேண்டும்.

இவ்வாறு செய்தால் இந்த மனுவை 60 நாட்களில் வெள்ளை மாளிகை பரிசீலித்து கருத்து கூறும். முக்கிய விடயமாக இருப்பின்



"பில் கேட்ஸ் தனது சுயலாபத்திற்காக கொரோனா (கோவிட்-19) வைரஸை பரப்பியதாகவும், இதன் பின்னணியில் உலகம் தழுவிய மிகப் பெரிய தடுப்பூசி வணிக நோக்கமும் உள்ளதாக குற்றச்சாட்டு எழுந்துள்ளது"

அமெரிக்க நாடாளுமன்றத்திற்கு இது அனுப்பி வைக்கப்படும்.

கடந்த ஏப்ரல்-10 அன்று இது போன்று பில் கேட்ஸை விசாரிக்கக் கோரும் மனு உருவாக்கப்பட்டுள்ளது. 6,51,725 அமெரிக்க மக்கள் பில் கேட்ஸுக்கு எதிரான மனுவில் கையொப்பம் இட்டுள்ளனர்.

அமெரிக்காவில் பில் கேட்ஸுக்கு எதிராக அழுத்தம் அதிகரித்து வருகிறது. பில் கேட்ஸூக்கு எதிரான போராட்டங்கள் வலுத்த நேரத்தில் கறுப்பினத்தைச் சேர்ந்த ஜார்ஜ் ப்ளாய்டு கொல்லப்பட்டு அந்த போராட்டங்கள் திசை திருப்பப்பட்டது.

# உலக சுகாதார அமைப்பின் சதி வேலைகள்


Tanzania
PERSPECTIVE
COUNTRY NEWS
Shein: we're working hard with JPM on covid-19 fight
EAST AFRICA
Raila key as Uhuru gets aggressive with Ruto
WORLD NEWS
Wuhan to test entire population after new virus cluster: state media

**WHO offered $20m bribe to see COVID-19 medicine poisoned -Madagascar President**

This is not my idea, but an idea suggested by the leaders of a village in a rural part of Africa. And this shows us the best idea of all – ask people to solve the problem for themselves. People who live in a community know their way of life. STORY PG 3

கொரோனாவிற்கு தடுப்பூசி தேவையில்லை என்று உலக அளவில் பல்வேறு மருத்துவர்கள் தெரிவித்துள்ள நிலையில், உலக சுகாதார அமைப்பு (WHO) கொரோனா தடுப்பு மூலிகை மருந்தில் விஷம் கலந்தால் 20 மில்லியன் டாலர் லஞ்சம் கொடுப்பதாகக் கூறி உள்ளது.

இதைக் கேட்டு கோபமடைந்த மடகாஸ்கர் நாட்டு குடியரசுத் தலைவர் உலக சுகாதார அமைப்பிற்கு கடும் கண்டனத்தை தெரிவித்துள்ளார்.

தடுப்பூசி வணிகத்தில் உள்ள பில் கேட்ஸ் பல ஆண்டுகளாக மக்கள் தொகை குறைப்பை பற்றி பேசி வருகிறார். அதற்கு தடுப்பூசிகளை பயன்படுத்த வேண்டும் என்று கூறி வருகிறார். கொரோனாவிற்கும் தான் தடுப்பு மருந்து கண்டுபிடித்துவிட்டதாக பில் கேட்ஸ் கூறி வரும் நிலையில் இந்த தடுப்பூசிகள் மக்களை கொல்லுமோ என்ற அச்சமும் எழுந்துள்ளது.

***- நிலன்***

# நைஜீரியா அரசுக்கு லஞ்சம் கொடுத்த பில் கேட்ஸ்



DAILY POST



NEWS

## Bill Gates offered House of Reps $10m bribe for speedy passage of compulsory vaccine bill – CUPP alleges



Published 5 days agoon May 4, 2020
By **Samson Atekojo Usman**



தடுப்பூசிகளால் நோய் தொற்றுகளும், வேறு சில பக்கவிளைவுகளும் உருவாகும் என மக்கள் நலனுக்கான மருத்துவர்கள் எச்சரித்துள்ளனர்.

இந்தச் சூழலில் நைஜீரியா நாட்டு ஆளும் கட்சிக்கு பில் கேட்ஸ் *10* மில்லியன் டாலர் லஞ்சம் கொடுத்துள்ளார். எதற்கென்றால், கட்டாயத் தடுப்பூசி சட்டத்தை நிறைவேற்றத் தான். இதிலிருந்தே தெளிவாகிறது தடுப்பூசி என்பது வியாபார நோக்கம் கொண்டது, மக்கள் நலனுக்கானது அல்ல என்று.

தற்போது, உலகில் அங்கீகரிக்கப்பட்ட தடுப்பூசி என்று  எதுவும் இல்லை என்பதை நைஜீரியர்கள் நினைவுபடுத்துகிறோம், எதுவும் இல்லாதபோது கட்டாய தடுப்பூசிக்கான மசோதாவை நிறைவேற்றுவதற்கான அவசரம் ஏன் என்று நைஜீரிய அரசியல் கட்சிகளின் கூட்டமைப்பு கேள்வி எழுப்பி உள்ளது.

நைஜீரியா நாட்டு அரசியல் கட்சிகள் இந்த விடயங்களை அம்பலப்படுத்தி உள்ளனர்.

# "பில் கேட்ஸை கைது செய்யுங்கள்"

## இத்தாலி நாடாளுமன்ற உறுப்பினர்

இத்தாலிய நாடாளுமன்றத்தில் பில் கேட்ஸை கைது செய்யுமாறு இத்தாலிய அரசியல்வாதி கோரியுள்ளார். ரோம் நாடாளுமன்ற உறுப்பினர் சாரா குனியல், பில் கேட்ஸை "தடுப்பூசி குற்றவாளி" என்று கண்டித்தார், மேலும் மனிதகுலத்திற்கு எதிரான குற்றங்களுக்காக அவரை சர்வதேச குற்றவியல் நீதிமன்றத்தில் ஒப்படைக்குமாறு இத்தாலி குடியரசுத் தலைவரை வலியுறுத்தினார். இந்தியா மற்றும் ஆப்ரிக்காவில் பில் கேட்ஸின் நிகழ்ச்சி நிரலையும், டிஜிட்டல் அடையாளம் 2020 மூலம் மனித இனத்திற்கு சிப் பொருத்தும் திட்டங்களையும் அவர் அம்பலப்படுத்தினார்.

அவர் பேசியதாவது,

"தனது தடுப்பூசிகளால், கேட்ஸ் ஆப்பிரிக்காவில் பல லட்சக்கணக்கான பெண்களை கருத்தடை செய்ய முடிந்தது. கேட்ஸ் ஒரு போலியோ தொற்றுநோயை ஏற்படுத்தியது, இது இந்தியாவில் **5,00,000** குழந்தைகளை செயலற்று முடக்கியது. இன்றும் டிடிபியால், கேட்ஸ் நோயை விட அதிகமான இறப்புகளை ஏற்படுத்துகிறார். எம்.ஆர்.என்.ஏ தடுப்பூசிகளை நமது நோயெதிர்ப்பு மண்டலத்தை மாற்றம் செய்வதற்கான கருவிகளை விநியோகிப்பது பற்றி அவர் ஏற்கனவே யோசித்துக் கொண்டிருக்கிறார். கூடுதலாக, கேட்ஸ் அமெரிக்காவில் 5ஜி வசதிகளை வைத்திருக்கும் பல பன்னாட்டு நிறுவனங்களுடன் வணிகம் செய்கிறார். இவை அனைத்தின் உண்மையான குறிக்கோள் மொத்த கட்டுப்பாடு. மனிதர்கள்



மீதான  முழுமையான ஆதிக்கம், சோதனை எலிகளாகவும், அடிமைகளாகவும் மாற்றுவது, இறையாண்மையையும் சுதந்திரத்தையும் மீறுவது ஆகும்.

அனைவரையும் அடக்க முடியாத வகையில் மக்களுடன் இணைந்து நாங்கள் எதிர்ப்பின் தீயைப் பெருக்குவோம்"

இவ்வாறு இத்தாலி நாடாளுமன்ற உறுப்பினர் சாரா குனியல் உரை நிகழ்த்தினார்.

கொரோனா தடுப்பூசி என்னும் கொடூர திட்டத்திற்கு எதிராக திரளும் நாடுகள்






நைஜீரியா - தான்சானியா - புருண்டி - மடகாஸ்கர்

தாங்கள் கண்டு பிடிக்கும் தடுப்பூசிகள், இன்ன பிற மருந்துகளை சோதிக்க ஆப்ரிக்க மக்களைத் தான் சோதனை எலிகளாக பயன்படுத்துகிறார்கள் ஆதிக்கவாதிகள். ஆப்ரிக்காவை தனது கட்டுப்பாட்டிற்குள் கொண்டு வர காங்கோ நாட்டின் ஒரு கிராமத்தில் தான் "எபோலா" வைரஸை பரப்பினான் பில் கேட்ஸ்.

தற்போது கொரோனாவை காரணம் காட்டி தலையிட நினைத்த பில் கேட்ஸுக்கு முகத்தில் கறியைப் பூசியுள்ளன சில ஆப்ரிக்க நாடுகள். உலக சுகாதார அமைப்பின் தடுப்பூசி திட்டங்களுக்கு அடிபணிய மாட்டோம் என நைஜீரியா, தான்சானியா, மடகாஸ்கர் மற்றும் சில நாடுகள் அறிவித்துள்ளது.

# உருவாக்கப்படுகிறதா புதிய உலக ஒழுங்கு?

நாம் கொரோனா என்பது திட்டமிட்ட நிகழ்வுகள் மற்றும் கோவிட்-19 (கொரோனா) பதற்றத்தை உருவாக்கியது பில் கேட்ஸ் போன்ற செய்திகளை பார்த்தோம். பில் கேட்ஸ் ஏன் இவ்வாறு செய்ய வேண்டும் என உங்களுக்குள் கேள்வி எழும். வெறும் பண வெறி என்று மட்டும் நீங்கள் நினைத்து விட வேண்டாம். அதையும் தாண்டி முழு உலகையும் ஒரே கும்பலின் கீழ் பணிய வைக்கும் திட்டத்தின் ஒரு பகுதியாகும்.

பில் கேட்ஸ் அதன் ஒரு வடிவத்தின் முகமாகத் தான் உள்ளான். இது போன்றவர்கள் பல்வேறு துறைகளை சார்ந்த  வல்லுநர்கள் என்ற பெயரிலும், பல கார்ப்பரேட் முதலாளிகள், ஊடக நிறுவனங்கள், தகவல் தொழில்நுட்ப

நிறுவனங்கள், பல நாட்டு அரசாங்கங்கள், அரசு சாரா அமைப்புகள், அரசியல்வாதிகள், அதிகார வகுப்பினர் என உலகம் முழுவதும் பரந்த ஒரு ஆழமான அரசாக *(Deep State)* செயல்படுகிறார்கள். தற்போது பில் கேட்ஸ் இந்த கும்பலின் ஆள் என்பதை வெளிப்பட்டால் அவர்கள் வேறு ஆட்களை முன்னிறுத்துவார்கள்.

## இவர்களின் நோக்கம் என்ன?

*ஒரு சிறு கும்பலின் கீழ் முழு உலகத்தை கொண்டு வருவது.

*மக்களை கண்காணிப்புக்கு உட்படுத்துவது.

*மக்கள் தொகையை வலுக்கட்டாயமாக குறைப்பது.

*தடுப்பூசிகள், சொட்டு மருந்துகள் வழியாக நம் மரபணுக்களிலேயே மாற்றத்தை ஏற்படுத்துவது.

*ஊரடங்கு, இராணுவச் சட்டங்கள் போன்றவற்றை பயன்படுத்தி மக்களை அடிமைப்படுத்துவது.

*ஒவ்வொரு இனத்தின் தனித்துவத்தை அழிப்பது.

இன்னும் பல நாசகார திட்டங்களை கொண்டவர்களாக இவர்கள் உள்ளனர்.

உலகை ஒருகுழு ஆட்சிக்குட்படுத்த கொரோனாவைப் (crown - மணிமுடி) பயன்படுத்தும் சூழ்ச்சித் திட்டத்தை ஒற்றை இந்தியாவை உருவாக்க நினைக்கும் ஆர்.எசு.எசு. கூட்டம் மிக நன்றாகவே பயன்படுத்திக் கொண்டது. மொழிவாரி மாநிலங்களாக இருக்கும் பல்வேறு தேசிய இனங்களின் அனைத்து உரிமைகளையும் அடுத்தடுத்த ஆணைகளின் வழியாகப் பறித்தெடுத்துக் கொண்ட மோடி அரசு நோய்த்தொற்று என்ற பெயரில் அறிவித்த

ஊரடங்கை மிக நன்றாகவே பயன்படுத்திக் கொண்டு தம் திட்டங்கள் அனைத்தையும் விரைந்து செயல்படுத்திக் கொண்டது. எதிர்த்துப் போராட வேண்டியவர்களோ நோயச்சத்தில் செயலற்று நிற்கின்றனர். ஆனாலும் இந்தியாவின் வல்லாளுமைக்கெதிரான தொடர்ந்த எதிர்ப்பு தமிழகத்தில் மட்டுமே நிலவி வந்தது. இந்தச் சளிக்காய்ச்சலுக்கு மருந்து எம்மிடம் இருக்கிறது என்று தொடக்கத்திலேயே முழங்கிய எதிர்ப்புணர்வாகட்டும், இதைக்காரணமாக்கி சங்கப் பரிவாரங்கள் கொணர்ந்த சூழலியல் சட்டம், புதிய கல்விக் கொள்கை ஆகியவற்றுக்கான எதிர்ப்பாகட்டும் தமிழகம் தனது கடமையைச் செவ்வனே செய்தது. இனியும் செய்யும்; எந்த வெளியார் ஆளுமையையும் இனியும் தமிழகம் தூக்கிச் சுமக்காது என்பதை எழுச்சி பெற்று வரும் எந்தமிழ் இளையோர் காட்டுவர்.

**தமிழ்நாடு பொதுவுடைமை கட்சி(மா-லெ)** அமைப்பைச் சேர்ந்த தமிழ்த் தேசியப் போராளி தோழர் உத்திராபதி அவர்களின் 7ஆம் ஆண்டு நினைவு நாள். தமிழ்நாட்டு விடுதலைக்காக போராட்ட வாழ்வை தேர்ந்தெடுத்தவர், அதற்காகவே 10 ஆண்டுகளாக சிறையில் அடைக்கப்பட்டார்.

தோழர் உத்திராபதிக்கு வீரவணக்கம்!

